10th August 1960]

SRI T. KARIA GOUNDER: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஏரிகளைப் புதிப்பிப்பது, பாலார் பேசின் ரூல்ஸ்படி நிறுத்தப்பட்டிருக்கிறதா? அப்படி உடைந்துபோன ஏரியைப் புதிப்பிக்க ரூல்ஸ் இடம் கொடுக்காது என்பதை தெரிவிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: ரிப்பேர் செய்வது என்று முடிவு செய்துதான் எஸ்டிமேட் வந்திருக்கிறது. அதை முழுவதும் பரிசீலித்த பிறகு ரிப்பேர் செய்யப்படும்.

*Death of a worker*

* 80 Q.—SRI V. K. KOTHANDARAMAN: Will the Hon. the Minister for Finance be pleased to state the reasons for not holding a post-mortem examination over the dead body of a building worker who died on 8th March 1960 in the Mary's College, Tuticorin?

THE HON. SRI C. SUBRAMANIAM: In this case death was due to an accidental fall and there was no foul play or suspicion. As the incident was not reported to the Police no post-mortem examination was held over the body of the deceased.

*Police dogs*

* 81 Q.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் போலீஸ் நாய்களின் பராமரிப்புக்காக எவ்வளவு தொகை செலவழிக்கப்பட்டது?

(ஆ) கேஸ்களைத் துப்புத்துலக்க நாய்களைக் கூட்டிச் சென்றதற்காக எவ்வளவு தொகை செலவு செய்யப்பட்டது?

(இ) எத்தனை கேஸ்களில் துப்புத்துலக்க போலீஸ் நாய்கள் உபயோகப்படுத்தப்பட்டன?

(ஈ) இவைகளுள் எத்தனை கேஸ்கள் துப்புத்துலக்கப் பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Rs. 8,023-08 nP.

(b) Rs. 5,546-98 nP.

(c) 184.

(d) 59.

SRI P. G. MANICKAM: சார், சென்னையிலிருந்து பல ஜில்லாக்களுக்கும் நாய்களை அனுப்ப வேண்டியிருப்பதால் அதிகச் செலவினங்கள் ஏற்படுகின்றன. ஆகையினல், நாய்களை வளர்ப்பதை இன்னும் சில ஜில்லாக்களுக்கு விஸ்தரித்து, அங்கெல்லாம் நாய் வளர்க்கும் திட்டத்தை அமுலாக்க சர்க்கார் பரிசீலனை செய்கிறதா, அல்லது இனி பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.